# A
# GARLAND OF SONGS.

## தோத்திரப் பாமாலை.

---

BY

**V. Subba Aiyar**

*Police School, Vellore.*

---

VELLORE:

PRINTED AT THE VICTORIA PRESS.

---

1917.

pyright Registered.) [விலை—அணா 6.

Q2:4L7
N17
17284

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| i | 27 | பிடுறு ... | பீடுறு |
| iv | 6 | அறிசீர் .... | அறுசீர் |
| 11 | 7 | லரிய .... | லறிய |
| ஷ | 22 | ஞெடு ... | ஞேடு |
| ஷ | 25 | ஒன்ளியோன் ... | ஒள்ளியோன் |
| 15 | 4 | யுளம்பதித்து ... | யுளம்பதித்தே |
| ஷ | 19 | வூர்ச்சி ... | ஓர்ச்சி |
| 16 | 4 | திருக்கங்கை .... | திருக்கங்கைக் |
| 19 | 7 | னேயென்று .... | னேயென்றே |
| 21 | 12 | யேத்தியே ... | மேத்தியே |
| 25 | 28 | கொள்ளுவார் ... | கொள்ளுவரோ |
| 26 | 3 | தெள்ளுதமிழிற் .... | தெள்ளுதமிழ் |
| 27 | 9 | என்றுசொல்ல ... | என்றுசொல்லப் |

## அரும்பத விளக்கம்.

பக்கம் 25, வரி 27, கொடுகுதல்=கூசி யொடுங்குதல்.

# Preface.

These verses were not composed with a view to have them published in the form in which they now appear. They were intended to strengthen my memory of Tamil-Prosody which I learnt very recently, and to forget the cares and anxieties, for sometime at least every day, during a fortnight of trouble and strain. I have, anyhow, consented to bring them out at the request of some of my friends and I leave them to the mercy of kind critics to have their say about.

I render my heartfelt thanks to Messrs P. K. Srinivasa Chariar, M. C. Sabapathi Mudaliar, Peer Muhammad Pulavar and B. S. Rathnavelu Mudaliar for the kind way in which they went through the manuscript copies and offered suggestions. I also thank Mr. M. Subramania Pillai for preparing the work for the press and Mr. V. S. Singaravelu Mudaliar of the Victoria Press, Vellore, for the neatness and the promptness with which the work was executed.

VELLORE,
*November 1917.*

V. SUBBA AIYAR.

172871

# Opinions.

Brahmma Shri P. K. SRINIVASACHARIAR AVL.,
*Tamil Head Pandit, Voorhees College, Vellore.*

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

1. தெளிவுமிகு மினிமையுமார் பொருனையெனு மாநதியாற்
செழிக்கும் பாண்டிக்
கொளிதருஞ்சீர்ச் சேரன்மா தேவியெனு நன்னகரி
லோங்கு பேரார்
அளிமிகுமந் தணர்திலகன் வேங்கடரா மப்பெயர்கொ
ளறிஞன் சாஸ்த்ரி
அளிபுதல்வன் சுப்பையன் தேவிடத்துப் பத்திமிக
வமைந்த மேலோன்.

2. மதுரமமர் அமிழ்தினுமே மிகவினிக்கும் தமிழ்மொழியில்
மாண்பார் தெய்வப்
பதுமமலர்த் திருவடியை யிதயமலர் தனிலிருத்திப்
பரிவி னோடும்
அதிகுணத்துக் கடவுளர்க்கும் அடியவர்க்குந் துதிமாலை
யழகாய்ச் சூட்டி
மதியுதவி புரிந்தனனால் மக்களுக்கிந் நூல்பொலிந்து
வாழி மன்னே.

Shriman V. RAMALINGAM PILLAI AVL.,
*Artist and Poet, Namakal.*

விருத்தம்.

1. சொல்லடுக்கிச் சீரடுக்கிச் சுவையடக்கி நவையகற்றிச்
சொல்லும் வைரக்
கல்லடுக்கும் அணியேபோல் கவியடுக்கிப் புவியடுக்கக்
களிப்பி னோடு
நெல்லடுத்த முளையெனவே நெறியடுத்த பலன்காட்டு
நேய மிக்கு.
அல்லடுத்த பகல்போல அன்புதித்த அறிவாளன்
அவன்யா ரென்னின்,

வெண்பா.

2. சபாபதிக்கே யன்புசெயுஞ் சைவமத சீலன்
சுபாகென்சொல் சுப்பையத் தோன்றல்—சபாஷென்று
சர்க்கார் மனமகிழச் சர்வே படிப்பிப்போன்
மிக்கா னுரைத்தபத மேல்.

1687
894.8111
172821

# Foreword by Pandit M. C. Sabapathy Mudr. of the Government Muhammadan Secondary School, Vellore.

THE REGISTRAR ... OFFICE ... 20 NOV 1917 MADRAS

பேரன்பினீர் !

மலர்தலையுலகத்துள்ள மக்களெல்லோரும் அடையவேண்டிய பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இந்நான்கினையும் அடையத்தலைப்படுவோன் எல்லாம் வல்ல இறைவன தருளைப்பெறல்வேண்டும். இவ்வருளைப்பெறும் முறையாதோவென்னின், மனமொழிமெய்களால் அவனைச்சிந்தித்து வந்தித்து வழிபடுதலே யென்ப. வந்திக்கத்தலைப்படுமுன் சிந்திக்கத்தலைப்பட்டு ஓர்வகை முடிவடைதல் இன்றியமையாதது. சிந்தனைக்குரியபோதுக் கேற்றவாறே, வந்தனைக்குரியமொழியாகிய போதும் சிறப்புடைத்தாம். மலர்ப்போதினும் மொழிப்போது நம்முழுமுதற்கடவுட் குவந்தபோதன்றோ? வாடாமாலை, யென்று மொருதன்மைத்தானமாலை, நம்மாலையறவேநீக்குமாலை, அன்பாகிய சிந்தனையென்னும் நார்கொண்டு சொல்லென்னும் மலரால் தொடுப்போன் வன்மைக்கேற்றவாறு பொலிவுபெறத் தொடுத்த சொன்மாலையா, அன்றிப்பூமாலையா, அவ்விறைவனுக்குவந்தது? பின்னையதன்று முன்னையதே யென்பது தேற்றமன்றோ? மலர்த்தொடையிட்டமாரனும் சிலைகொண்டெறிந்தசாக்கியரும் சான்றாவர். அன்பொன்றே அடிப்படை யாதல்வேண்டும். அன்பின்தோற்றம் வன்பாய்க்காணக்கிடக்கினும் அன்பேயென்பது துணிபு. அன்பே அரன், அன்பே அரி, அன்பே அருகன், அன்பே ஆண்டவன், எனப்பற்பல சமயத்தாரும் கூறுகிற்பர். இனி இவ்வாண்டவனின் தோற்றந்தான்யாதோவெனின், 'சொல்லாய்ப்பொருளாய்த்தோன்றுவானெம்மிறை' என்றுகூறுப. அச்சொல் அன்பென்னும் படுநிலத்தினின்றுதோன்றிய விளைவாயிருத்தல்வேண்டும். அவ்வகைச்சொல் ஒன்றே, அவனதருளுக்கு நம்மை உரிமையுடையோராக்கும். ஆகவே அவ்வுரிமையைப்பெற அவாவினோர் அன்பென்னும் ஆன்றவுணர்வினுக் குட்பட்டு வாயாலும் மெய்யாலும் வந்திக்கக்கடவர்.

இனி இவ்வாயால் வந்திக்கும்தொண்டை மேற்கொண்டு இத்தோத்திரப்பாமாலையை இயற்றியவர் எனது நண்பர் பிரம்மஸ்ரீ. V. சுப்பய்யர் அவர்கள். இவர் பாண்டிநாட்டில் நெல்வேலிக்கடுத்த சேரன்மாதேவியென்னும் ஊரைச்சார்ந்தவர். இவரது தந்தையார் பிரம்மஸ்ரீ. வெங்கடராம சாஸ்திரி யென்பார் வடமொழிக்கலையில் அதிவல்லுநராய் வைதிக ஒழுக்கத்தில் மிகச்சிறந்து விளங்கிவந்தார். இவர் ஆந்திரவகுப்பினைச் சார்ந்தாராயினும், செந்தமிழ் நாட்டைத் தமக்குப் பிறப்பிடமாகக்கொண்டாராகலின், இயற்கையிலேயே தமிழைக் கற்கப்பேரவாவும், கற்றோரிடத்திற் பேரன்பும் கொண்டவராவர். இவரது தமிழ்நூற்கல்வியின்பரப்பு இத்தகைச்சிறப்புடைத் தென்பது இம்மாலையினின்று தெளியலாகும். இம்மாலையை எழுதவாரம்பித்த இரண்டொரு நாட்களுக்கு முன்புதான், செய்யுளியலில் பருப்பொருளாயுள்ள சிலவிலக்கணங்களைக் கற்றுக்கொண்டார். இம்மாலையிலுள்ள நூற்றுப்பதினொரு பாக்களையும் இரண்டுவாரகாலத்தில் பாடினார். பாடுங்காலத்தில் இவருக்கேற்பட்ட இடையூறுகளுஞ் சிலவுள.

இவர்செய்யுட்களைச் சிறிது நுணுகிப்பார்க்கப்புகின், இவருக்குப் பாடும்வன்மை இயற்கையிலேயே அமைவுற்றிருப்பதாகத் தோன்றுகிறது. இவர்முன்கூறியபடி செய்யுளிலக்கணத்திற் பருப்பொருளாயுள்ள விஷயங்களைத் தம்மனத்திற் செம்மையாக வலியுறுத்தவேண்டி எழுதியசெய்யுட்களாகக் கருதப்படினும், செய்யுட்போக்கும் பொருட்போக்கும் நோக்குமிடத்து, இம்முயற்சியிற் றளர்ச்சியடையாதிருப்பின், மிகவழகான செய்யுட்களையும் அதிவிரைவில் பாடும்வன்மை உடையவராவர் என்றுகூறலாம். இத்தோத்திரம் பலவேறுசமயத்தாருக்கும் ஒப்புடைமையாய் வெவ்வேறுசந்தவின்பங் கொண்டதாய்உள்ளது. படித்தோர் பாமரர் எனவிருவகுப்பினரும் இன்பமனுபவிக்கவேண்டி எளியநடையில் ஆன்றபொருளமைத்துக் கூறினது பாராட்டற்பாலதே. பாடும்வன்மை இயற்கையில் அமையப்பெற்றுள்ள இவர், இன்னும் இதுபோன்ற செய்யுள்நூல்களை எழுதி நந்தமிழ்நாட்டிற் குபகரிக்க எல்லாம்வல்ல இறைவனருள்புரிவானாக.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

1. மதிவளரும் பொதியமலைக் குறுமுனிவ னறுந்தமிழை
வழங்கல் மான
மதிவளரும் சடிலநதித் தன்மையினு மாண்புடைத்த
பொருனை யாறு
கதியளிக்கும் பொருளெல்லாம் குறையாது காதலித்துக்
காக்க வேண்டி
விதிமுறையிற் பிறழாது விளைவளிக்கும் வியநாடாம்
பாண்டி நாடு.

2. அந்நாட்டின் சேரன்மா தேவியினன் அருமறையோன்
ஆன்ற நூலின்
செந்நெறியை முறைபயின்றோன் வேங்கட்ட ராமனெனும்
சீர்த்தி யாளன்
தன்னுடைய தனிமகனும் சுப்பய்யன் தலையன்பால்
சாத்து மிந்த
சொன்னயவிப் பாமாலை நங்கடவுள் திருமுடியிற்
றுலங்கி வாழி.

சுபம். சுபம். சுபம்.

---

## சிறப்புப்பாயிரம்.

---

திருச்சிராப்பள்ளி S. P. G. காலேஜ் பிரதமதமிழ்ப்பண்டித ராயும் தமிழ்மாதுக்குவந்த புத்திரராயுமிருந்த ஸ்ரீமான். பிச்சை இப்ராஹிம் புலவரவர்கள் மாணுக்கர் ஸ்ரீமான் பீர்முகம்மது புலவ ரவர்களியற்றியது.

### அறிசீர்கழிநெடிலடி விருத்தம்.

---

1. ஒருதனிமெய்ப் பரம்பொருளுக் குரித்தாய வரம்பிலின்ப
முடைத்தா யோங்கி
வருதகைமைத் தமிழ்மொழியை வளர்த்தலொடு புவிதாங்கு
மாண்பிற் றென்ன
மருதமுதற் பலதிணையு மயக்கமுடைத் தென்பாண்டி
வளநாட் டின்பாற்
கருதியநற் பொருளெவையுந் தருசேர மாதேவிக்
கண்வாழ் வுற்றேன்.

2. தலம்புகழும் வள்ளலவ தானவேங் கடராம
சாஸ்த்ரி கட்கோர்
புலம்பெரிய தவச்செல்வப் புதல்வசிகா மணியாய
புண்ய சீலன்
நலம்பெருகு மான்றகுண மனைத்துமொருங் கமைந்தியல
நாளுஞ் சீர்சால்
சிலம்புமிசை விளக்கமெனத் திகழ்தருசுப் பையரெனுந்
திருப்பே ராளன்.

3. எண்ணறித லொருபுடைமற் றெழுத்தறித லொருசாரீவ் .
விரண்டுற் றோரே
கண்ணுடைய ரெனுமுதுமைக் கவின்மொழிக்கோர் காட்
டாகக் கணித மெல்லாம்
நுண்ணறிவா லுற்றுணர்ந்து நுவன்றகலைப் பஃறிறத்த
நூலுங் கற்று
மண்ணளவைத் தொழின்முறையு மேனையவு மெமக்கருளு
மன்பே ராசான்.

4. தன்மொழியா மாந்திரமுந் தனிமொழியாஞ் செந்தமிழுந்
தழைக்குஞ் செங்கோன்
மன்மொழியா மாங்கிலமும் வரையறுப்பி னொருநெறியே
வாய்ந்தக் காலுந்
தென்மொழியே மனக்கினிய செய்யுளியற் கமைந்ததெனத்
தெரிந்த மேலோன்
இன்மொழியே பயில்கின்ற திருநாவான் யார்மாட்டு
மிரக்க முள்ளோன்.

5. தற்பரனு மொருதேவைப் பலவேறு சமயத்தார்
தாந்தாங் கொண்ட
பற்பலவே றொழுக்கத்தான் பரவிடினும் விரும்புமுடன்
பாடில் லாராய்
நிற்பதுவீண் பேதமையென் றறிவுறுத்த வல்லநடு
நிலையா லின்னோன்
பொற்புறவே யாவர்க்கும் பொருந்துதக விற்பாக்கள்
பொதுவாய்க் கூறி,

6. மனிதருவந் திடப்பாடு மதியிலிகள் போலாது
வாய்மை சான்ற
புனிதருற வகலாத தன்வாழ்க்கை நலந்தோன்றும்
பொலிவாற் றெய்வத்
தொனிதருபத் திச்சுவையுஞ் சொற்சுவையும் பொருட்
சுவையுஞ் சொட்டச் சொட்ட
இனிதருளு மித்தோத்ர மாலையெனு நூற்பெருமை
யிசைக்கற் பாற்றே.

---

உ

குருப்யோநம:

# தோத்திரப்பாமாலை.

---

## காப்பு.

நேரிசை வெண்பா.

1. சீராருந் தெய்வத் திருநாம மீதுயான்
சீராக நின்றுதுதி செப்பவே—நீரார்
பரமசிவன் மைந்தனெனப் பன்மறையும் பேசுங்
கரமுகவன் தாளே கதி.

---

சவலை வெண்பா.

2. வேதத் திருமணியை வெண்கலைகள் பூண்டவளை
யாதரிப்பார் தங்குறைதீ ரன்பினளைச்
சாதிவிதி யற்றவளைச் சற்சனர்கள் போற்றுவளை
நீதிவிதி யுற்றேன் நினைந்து.

---

## அவையடக்கம்.

நேரிசை வெண்பா.

3. வேந்தர்க ளானகவி வீரர்கா ளுங்களிடம்
ஆந்திர ஞனறைவ தொன்றுண்டால்—ஏந்தலின்மே
லிப்பாவை இச்சையினு லீங்கிசைத்தே னல்லாது
தப்பா தெனவுரையேன், தாழ்ந்து.

---

# சமய குரவர் துதி.

---

## நேரிசை வெண்பா.

### சங்கராசாரியார்.

1. சங்கினங்கள் முத்துயிர்க்குஞ் சான்ற திருவாங்கூர்
[1] தங்குபுரை தீர்மதிநேர் சங்கரனே,—நன்குபுகழ்
அத்துவைதந் தந்தருணி யாதரிப்பா யெப்பொழுதுஞ்
சத்தியிலாப் பேதையனைச் சார்ந்து.

---

### ராமானுஜாசாரியார்.

2. ராமனரு ளிற்பொலிந்த ராமானு ஜாவெனக்குத்
தாமதமில் [2] காட்சி தனைத்தந்து—காமமுடன்
கெட்டலையு மவ்வழியே கேடென்று நன்குணரச்
சுட்டியருள் காட்டாய் கரந்து.

---

### மத்துவாசாரியார்.

3. உடுப்பியெனு பாருகரி லும்பரருள் வாரி
[3] மடுத்த பெருந்தகைமை வாய்ந்தோய்—கடுத்தமுசங்
காட்டுவோர் தம்மைக் கடிந்தொறுக்கும் மத்துவனே
பாட்டிற் கிரங்கிக்கண் பார்.

---

### பௌத்தமுனி.

4. ஆலடியி லேயடைந்தே [4] யாற்ருத்த வம்புரிந்து
பாலவய திற்றுறந்த பௌத்தமுனி—சீலமுடன்
செய்நன் னெறியறியச் செப்பா யெனக்குநீ
கைவல்ய மாகுங் கதி.

---

1. தங்குபுரைதீர்மதி=தன்னிடம் வாய்ந்த களங்கத்தையொழித்த சந்திரன். 2. காட்சி=அறிவு. 3. மடுத்தல்=வாயாற அல்லது மனமாற ப்பருகுதல். 4. ஆற்ருத்தவம்=வேறுயாராலுஞ் செய்ய முடியாத தவம்.

சமணகுரு.

5. அத்தனரு ளோங்கு மசோகடியின் மாதவஞ்செய்
சுத்தமுறு திவ்யமுகச் சோதிமணி—இத்தரையில்
ஏழையரை யாதரித்தே யின்பமுறு நற்சமணோய்
தாழுமெனைக் காத்தலரி தா?

---

ஸோராஸ்டர்.

6. அங்கியதாந் தெய்வமதை யாதரிக்குஞ் ஸோராஸ்டா
ஆங்கிருந்தே யிங்குவந்த அம்பொருளே—எங்குமிகச்
சத்கிரியை செய்வோரைச் சார்ந்திருக்குஞ் சான்றோனே
பத்திரமாய்ப் பாரிலெனைப் பார்.

---

முகம்மது.

7. மக்கா வளநகரில் வந்துதித்து வான்கருணை
எக்கால மும்பொழியு மேந்தலே—தக்கோரைச்
சார்ந்த முகம்மதுவே சாற்றும் பலநலனும்
நேர்ந்திருக்க, வல்வினையே நீக்கு.

---

ஏசுகிருஸ்து.

8. நாசரத்தி லேபிறந்தோய் நன்னயச்சொல் லாற்சிறந்தோய்
ஈசனருட் சேயென்னும் ஏசுமன்னா—பாசமற்றுச்
சற்குருவை யேனுடைத் தக்கவழி யானுணர்வான்
வற்றலிலா வண்மையருள் மல்கு.

---

# சேண்பாக்கம் விநாயகர் பஞ்சகம்.

---

குறள் வெண் செந்துறை.

1. தான்தானே வந்துதித்துத் தாரணியுள் ளோர்புகழச்
சாந்தமுடன் விளங்குகின்ற சம்புவே நானுன்றன்
தேன்போன்ற நாமமதைத் தினமுந்துதி செயவருளாய்
சேண்பாக்கத் தமர்ந்துவளர் சித்திவி நாயகனே.

2. சித்திகளை லாமளித்துச் சிறந்தோங்குந் திருவடியைச்
சித்தமதிற் றான்கொள்ளுஞ் சிவநேய ரானவர்கள்
பத்தியில் லாமனிதர் பலர்போலப் பரிதவித்துப்
பற்றுக்க ளெலாமிழுக்கப் பாவமதில் மூழ்காரே.

3. பாவமதி லமிழ்ந்துழலும் பாமரர்க ளானவர்க்குப்
பாதவிணை யுவந்தளிக்கும் பரமனுனைப் போலுண்டோ?
சேவற் கொடியோனுஞ் சேர்ந்திடவே வள்ளியுடன்
தேவா உனதருளே தேடியுற்ற தும்பொய்யோ?

4. தேடிவரு பாலாற்றின் தென்கரையி லேயமர்ந்தாய்
தென்னையொடு மாகதலி தீங்கனிக ளேயளிக்கப்
பாடிவரு பாவலரின் பக்தியினை யோர்ந்தேகண்
பார்த்தின் னளிசுரந்து பயமதனை யேயொழிப்பாய்.

5 பயமதனை யேயடையும் பாரிலுள்ள தொண்டருக்குப்
* பாவலனே வந்துதவிப் பாலித்த லாகாதோ?
கஜமுகனே நானுன்னைக் கனிந்துபல பாடுதற்குக்
கலைவாணி யிடமுரைத்துக் கருத்தில்நிற்கச் செய்யாயோ?

---

* பாவலன் = பாரதம் எழுதியதால் பாவலன்என்க.

# கலைவாணி பஞ்சகம்.

---

### கலிப்பா.

1. பாரதியென் றேயுலகோர் பணிந்துவந்தே போற்றிநிற்பச்
சீரதனை யேயளிக்குஞ் சிறந்தபெருங் கலைவாணி,
சேர்[1]மணியும் [2]புத்தகமுஞ் சித்தமதி லேபதித்துக்
கார்பயிலு மயில்போலக் களித்துவக்கக் கருணைசெய்வாய்.

2. கருணையது செய்வையென்று கருத்தினிடை யேநினைப்பார்
பெருநினைவு தனையுணர்ந்து பேணிவரங் கொடுப்பவளே,
தருமமுறை நெறிதவறாத் தகையிலெனை யாட்கொண்டு
குருமொழியே பாராட்டுங் குணமதனை யேகொடுப்பாய்.

3. குணமதனை யளித்தியென்று கூறுகின்ற மானிடரின்
வினையதனை யேயகற்றும் வீணையுடை யெழில்வாணி
தினையளவு மறிவுபெறாச் சிறியேனை யேநினைந்து
மனமதனில் நீயுவக்க மன்றாட வருள்புரிவாய்.

4. [3]மன்றாட வருள்புரியும் மாண்புடைய மாதேவி
வண்டாடு குழலுடையோய், வண்புயங்கள் நான்கேந்தி
வெண்டா மரைவளரும் வேதமுடி வானவுன்றன்
தண்டா மரைத்தாளைத் தமியனுக்குத் தந்துவப்பாய்.

5. தந்துவப்பாய் நீயென்று தாரணியுள் ளோர்போற்ற
வெந்துயரை யேநீக்கும் வெண்கலைகள் பூண்டமின்னே
பந்துவர்க்கம் நீயலவோ, பாரிலெனைக் காப்பதற்கு
முந்திவரும் ஸரஸ்வதியே, முதற்பொருளே, நீயருள்வாய்.

---

1. மணி=ஞானத்தைக் கொடுக்கும் சூசகம். 2. புத்தகம்=உலக வழக்கிற்குவேண்டியவறிவை யுணர்த்தும் சூசகம். 3. மன்றாட=மன்றாடுதலெனவும்; மன்று+ஆடுதல் எனவும் பொருள் கொள்க. மன்று=சபை.

## கார்த்திகேய பஞ்சகம்.

---

அறுசீர் விருத்தம்.

1\. வள்ளியை மணந்த [1]செம்மல் வானவர் மகளின் பாகன்
துள்ளிமுன் னெதிர்ந்து வந்த சூரனைக் கொன்ற தீரன்
[2]பள்ளியா முலகில் வாழும் பாமரர் தம்மைக் காக்கும்
[3]ஒள்ளியன் [4]கார்த்தி கேய [5]ஒங்கலைக் கருத்தில் வைப்பாம்.

2\. கருத்தினு லரிய வொண்ணுக் கரியமால் மருகன் றன்னைச்
சிரத்தையோ டுலகை யாண்டு சிறந்திடுந் தேவ தேவைப்
பரத்தையே புகழ்ந்து பேசும் பன்மறை பணியும் வேந்தைக்
கரத்தையே குவித்து வாழ்த்தக் களங்கம
தொழிவாய் நெஞ்சே.

3\. களங்கம தில்லாத் தேவன் கருத்திலெப் பொழுது நிற்க
விளங்கிய பெண்ணி னுசை வீணெனத் துணிந்து நீயும்
தளமலர் கொண்டு போற்றித் தரிசனங் காணக் காணக்
[6]குளமது போலு முக்தி கொடுப்பனே குமர வேளும்.

4\. குமரவேள் குணத்தை யேற்றிக் குவலயந் தன்னில் வாழுஞ்
சமரச பக்தி வாய்ந்தோர் சரணம தடைந்தோர் நாளுந்
தமர்தம தென்னும் வாஞ்சை சற்றுமே யணுகா ராகிச்
[7]சிமயம தேற வேண்டாச் சித்தியை யடைவ ரம்மா.

5\. சித்திக ளெல்லா வற்றைத் திறமுடன் கொடுக்க வல்ல
பத்தரை மாற்றுப் பொன்னைப் பணியநற் பகவான் றன்னை,
வித்தைகள் பலவும் வேண்ட விளக்கிடு மீசன் சேயைச்
சுத்தமாம் மனத்தி னுடு துரிதமாய்ப் பணிவாய் மாதோ.

---

1\. செம்மல்=எப்பொருட்கு மிறைவன். 2. பள்ளியாம் உலகு=வரும் பிறவிகளுக்கு நம்மைப்பாத்திரர்களாகச் செய்யும் இவ்வுலகு. 3. ஒள்ளியன் =ஒள்ளியோன், நல்லோன். 4. கார்த்திகேயன்=கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்த முருகன். 5. ஒங்கல்=அரசன். 6. குளம்=சர்க்கரை. 7. சிமயம்=மலை.

# எழுமலைப் பஞ்சகம்.

---

## கலிவிருத்தம்.

1. எழுமலை யரண்நடு வெழுந்தரு ளப்பன்,
பழவினை பலவுமே பறித்தெரி பரமன்,
தொழவரு தொண்டர்தந் தோழனா யுள்ளான்
கழல்தனைக் கருத்தினில் வைப்பது களிப்பே.

2. களிப்புடன் கர்த்தனைப் பணிந்துநாம் போற்றி
ஒளியுற வாழவே சேருவம் ஒன்றே;
தளிர்நிறை மலைகளைத் தாண்டியே தளர்ந்த
உளமது உறுதியா யும்பரை யுவப்பாம்.

3. உவப்புட னுலகினை யுறுதியாய்க் காட்போன்,
தவறுடை மாக்களைத் தாங்குநற் றேவண்,
[1] அவமதி னுயிர்களை யலையவி டாமற்
றவநெறி வழிகளைத் தந்திடும் [2] வள்ளல்.

4. வள்ளலை யனுதினம் வழிபடு மாந்தர்
கள்ளம தின்மனக் கதிதனை யடைந்து
தெள்ளமிழ் தினுமிகத் தெவிட்டுநல் வீட்டைக்
கொள்ளுசீர் வழிகளைக் கோருவர் யாதோ.

5. கோருவ யாவையுங் கொடுக்குமிவ் வண்ணல்
பாரினில் யாவரும் பற்றநற் செம்மல்;
தாருடை மன்னருந் தாழ்ந்து வணங்கும்
வீறுடை வேங்கடப் பதியனை வாழ்த்தே.

---

1. அவம் = வீண். 2. வள்ளல் = வரையாது கொடுப்போன்.

# மதுரை மீனாம்பிகை பஞ்சகம்.

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

1. சதுர்மறையுஞ் சாத்திரமுஞ் சங்கிதமுஞ் சலியாதே
சாற்றிப் போற்றும்
மதுரையெனு முதுநகருண் மணிபோலும் விளங்குகின்ற
மாதே வன்றன்
இதம்பெருகு மிடப்பாகத் தமர்ந்துவளர் [1]கயற்கண்ணி
எழிற்பூங் கோதைச்
சதம்நினைந்து சகலவினை பறந்தோடப் பணிவதற்கே
சார்ந்து வாரீர்.

2. பணியவருள் பார்வதியைப் பக்தர்களின் மனக்களிப்பைப்
பழமை வாய்ந்த
அணியழகு செய்வதொக்கு மாபரண முடையவளை
யகில மெல்லாந்
தனியுரிமை பூண்டவளைத் தக்கனது தவக்கொடியைத்
தகைமை வாய்ந்து
[2]பணியுலவு கண்டனது பங்கினளைப் போற்றவின்றே
பாங்காய் வாரீர்.

3. போற்றுமொரு புண்ணியளைப் பொற்கொடிபோ லாடு
மிடைப் புகழ்பூங் கொம்பைத்
தோற்றமிகு சுந்தரியைச் சொலிக்குமுக முடையவளைச்
[3]சோதி வைகை
யாற்றருகி லமர்ந்தவளை யன்பருக்கா யகமுவந்தே
யமுத ளிக்குந்
தேற்றமிகு செழும்பொருளைத் தெளிந்துபா மாலைகொண்டு
சேர்க்க வாரீர்.

---

1. கயற்கண்ணி = மீன்போன்ற கண்ணுடையவள்; மீனாக்ஷி. 2. பணியுலவு = பாம்பு உலவுகின்ற, அல்லது உள்ளிருக்கும் விஷம் ஒளி வீசுகின்ற. 3. சோதிவைகை = மூழ்குவோருக்கு அருட்சோதியை விளக்கும் வைகை.

4. மாலைகளின் மதுதுளிக்க மாணிக்க மகுடசைய
மற்றுங் நல்ல
சேலைகளுஞ் சிறப்புடனே சிற்றிடையிற் சேர்ந்திலங்கு
சின்ம யத்தை
காலன்நமைக் கவராது காத்தருளக் கங்கணங்கொள்
கயிலை வாழும்
ஆலமுண்ட அப்பனது அன்பினளின் ஆற்றலதை
யறைய வாரீர்.

5. அறையமன மொவ்வாத அரக்கர்களை யடியோடே
யகற்றி நின்ற
பரையுமையைப் பாட்டில்மனங் கசிந்தருளும் பவளவாய்ப்
பாவை தன்னை
உரைப்பவரி னுளம்புகுந்தே யருள்பொழியும் பெருங்
கருணை யுடைய மின்னை
மறைபோற்று மாணிக்க மேன்மணியைச் சிரந்தாழ்த்தி
[4] வழுத்த வாரீர்.

## கஞ்சிகாமாக்ஷியம்பிகை பஞ்சகம்.

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

1. காமாக்ஷி யெனவுலகோர் கனிந்துபல கவிபாடக்
கருத்தில் நின்று
நீகாக்ஷி கொடுத்தருளும் நேர்மைதனை யெப்பொழுதும்
நினைந்து நாளும்
சீர்மாக்ஷி யுடன்வாழத் திறமளிக்குஞ் செயலுடைய
செல்வ மான
பேராக்ஷி யுடையாளே பேரின்ப மளித்தருளப்
பெற்றி வாய்ந்தோய்.

2. அளித்தருள்வை நீயென்றே யடியார்க ளன்புடனே
யறைந்து நிற்பக்
களித்துமனக் காம்யமதைக் கார்போன்று கொடுத்துவளர்
கனக வல்லி
தெளித்தலிலா மனமுடைய சிறியேனை யோர்நிமிடஞ்
சித்தந் தன்னில்
சளித்தலின்றி நினைந்துமனத் தேர்ச்சிகொள வேகணிப்பை
[1] சங்க கண்டி.

---

4. வழுத்தல்=துதித்தல்.
1. சங்ககண்டி=வலம்புரிச் சங்குபோன்ற கழுத்தையுடையவளே.

3. தேர்ச்சிகொண்டே காஞ்சிநகர் தழைத்தோங்கப் பொருந்தி
நிற்குஞ் சின்ம யத்தை
ஆர்ச்சிதஞ்செய் பொருள்போன்றே யாபத்துக் குதவுகின்ற
அரும ருந்தை
[2]ஓர்ச்சிமிகு பெரியவர்க ளொருபொழுது மறவாத
உண்மை யான
ஊர்ச்சிதமே தந்தருளு மொண்பொருளை யுளம்பதித்து
உய்வாம் யாமே.

4. உளம்பதிப்போ ருயர்வினையே கண்டுமனத் தெளிர்ச்சி
கொளு முண்மை தன்னை
இளம்பிடிபோ னடையழகு மெழில்முகமுஞ் சேர்ந்தபெரு
மிங்கி தத்தைக்
[3]களந்தனிலே கறையடக்கிக் காத்தருளக் கருத்திலுன்னிக்
கடுகி வந்தோன்
[4]களமவளை மிகப்பணிந்து கன்மவினை பலதொலையக்
கணனஞ் செய்வாம்.

5. கணனமது செய்வோரைக் கணப்பொழுது மறவாத
காருண் யத்தை
ஜனனமுடன் மரணமெனும் வழியறுத்துப் பதவிதருஞ்
சான்ற தாயை
மனனமிகச் செய்வோரை மகிமையுட னுண்டருளும்
வண்மை வாய்ந்து
[5]பணனமுவு தோளுடைய சங்கரனின் செங்கிளியின்
பாதஞ் சேர்வாம்.

## காசிவிசாலாக்ஷி பஞ்சகம்.

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம். 172871

1. சாலாக்கி தக்கனது வேள்வியிடை நீயடையுந்
தன்மை போலக்
காலாக்கி னியெனவே யான்செய்த பாவமெலாங்
கரித்து நின்று
மேலாக்கி யென்றனையே மேன்மையுடன் வாழுவருண்
மேவி யுன்றன்
பாலாக்கி மனமுவந்து பதமளிக்கத் திறமுடைய
பவள வல்லி

---

2. ஓர்ச்சி = ஆராய்ச்சி; அறிவு. 3. களம் = கழுத்து. 4. களம் = மனைவி.
5. பணம் = பாம்பு.

2. திறமுடனே யரக்கர்களை யழித்துநின்ற குணமதனைத்
தெளிந்து போற்ற
அறமிகவே கருணைசெய வபிமான மிகக்காட்டு
மம்பு ஜாக்ஷி
துறவுமிகு பெரியவர்கள் சேர்ந்துதவம் பலவியற்றுந்
துறைகள் வாய்ந்து
கறைமிடற்றுக் கண்ணியனின் சடையிழியுந் திருக்கங்கை
கரையி லார்ந்தோய்.

3. கங்கையெனுந் [1]தரளவடங் கழுத்திலணி பூமடந்தை
களிக்க வென்றே
திங்களணி வேணியனுந் த்ருபுரசுந் தரிநீயுஞ்
செழிக்க வைத்த
சங்கைவரை யில்லாத பணிபோலுங் காசியெனுந்
தனிப்பு ரத்தில்
தங்கிமன முவந்துபலன் தரவெனவே துணியுமுளத்
தருமத் தாயே.

4. துணியுமுள மிகவுவக்கத் தொல்வினையை யேபோக்கத்
துரித மாய்நான்
பணியவருள்; பக்தர்களின் மனங்களிக்க விடையூர்வோன்
பாதி யானேய்
அணிமலியு மங்கையர்க ளகமுவந்து மிகத்தாழ
வன்பு கொண்டே
தணியுமனம் பெருத்தெழவே யவர்கட்கு நின்கருணை
தந்து காப்போய்.

5. நின்கருணை யேதேக்க நினையாத போக்குடைய
நிலைமை வாய்ந்த
என்கருத்தி லெப்போது மிங்கிதமாய் நின்றுமுன
தெழிலே காட்டித்
தங்கிருளைப் போக்குகின்ற மதிபோலு முறுவலையே
தானுய்த் தந்து
செங்கமலத் தாட்களையென் சிரமீது சேர்த்திடுவாய்
செம்பொற் பாவாய்.

---

1. தரளவடம்=முத்துமாலை.

# ரகுராம பஞ்சகம்.

---

கலிப்பா.

1. கானகத்தில் வானரத்தைக் கனப்படுத்திப் பைந்தொடி
ஜானகியைக் கண்டுவரச் செயவல்ல ஜயவீரா, [யாஞ்
தானினைத்த படிநடக்குந் தாஸனது மனக்குரங்கு
மானத்துடன் வாழவழி மகிழ்ந்தளித்தி தாசரதே.

2. தாசரதே யென்றுசொல்லி மகிழாத தசமுகனை
வீசுசர மொன்றுகொண்டு வேரறுத்த ஜயகோலா,
[1] தூசுசுற்றி மேன்மினுக்குந் துன்மார்க்கர் வழியேனன்
ஆசைகொண்டு போகாதே அருள்கசுர ரனுகூலா.

3. அனுகூலா வென்றேத்தி யன்பொடுவா ழிளையோனைத்
தனுவாளுந் தீண்டாது தடுத்தாண்ட பெரியோனே,
தனியேயிவ் வுலகிடையே தத்தளிக்குஞ் சிறியேனைத்
துணிவுடனே வந்துதவிக் காத்தருள்க துரையேநீ.

4. துரையேநீ என்றுசொலித் துரிதமுட னழைத்தேகுந்
துறவிபெருங் கௌசிகனின் துயரமதைத் தீர்த்தோனே,
மறைபோலு மாட்சியுறு மாகவியாங் கம்பனது
உரையாலு முணரவொண்ணு ஒப்பற்ற ஒண்பொருளே.

5. ஒண்பொருளே யுன்குணத்தை யுரைத்துவளர் உம்பர் தமைத்
தண்கருணை தான்பொழிந்து காத்தருளுந் தயாநிதியே,
கண்மணிபோ லுனைவளர்த்த கௌசலையின் மனக்களிப்பே
[2] ஷண்மதங்க ளின்முடிவே, ஸகலகுண ரகுராமா.

---

1. தூசு=சேலை. 2. ஷண்மதம்=சைவம், வைஷ்ணவம், சாக்தம், சௌரம், கணாபத்யம், கௌமாரம்.

# மீனாக்ஷி சுந்தரர் பஞ்சகம்.

---

கலிப்பா.

1. மீனாக்ஷி சுந்தரனின் தாளதனை மிகப்பணிந்து
[1]மேனாட்டின் மேயவருங் கீர்த்திபெற் றேவாழ்வார்,
தாளுக்ஷி கொண்டிந்தத் தாரணியைக் காத்தருளுங்
கோனாக்ஷிக் குள்ளமர்ந்தோர் குறைப்படுவ தில்லைநெஞ்சே.

2. நெஞ்சினால் நினையாத வஞ்சகரா மரக்கர்களைப்
பஞ்சுபோற் பறந்தோடப் பண்ணியநற் புண்ணியன்றன்
[2]கஞ்சப்பொற் றாளதனைக் கண்ணாரக் கண்டவர்கள்
[3]விஞ்சையரி னுலகினையும் வீணாக வேமதிப்பார்.

3. மதிப்புடைய மறைவல்ல மாஞான சம்பந்தன்
பதித்ததிருப் பாக்களையே பலநாளு நனியுவந்தோன் ;
துதித்துமிகப் பாடியநற் சுந்தரனின் செய்யுளெலாம்
பொதித்துளத்தில் மிகவிழைந்து போற்றுகின்ற மெய்ப் பரமன்.

4. போற்றுகின்ற திருநாவுக் கரசாகி ஞேன்பொலிவைத்
தேற்றமுடன் தெரிந்தெடுத்துப் புகழ்கின்ற குணச்செம்மல்;
ஆற்றலிலா வடியேனின் அற்பமாம் பஞ்சகத்தைச்
சாற்றவென்று மனத்தினிடை சார்ந்திருக்குந் தணிமகிபன்.

5. மகிபனென மனமகிழ்ந்து மன்றாடு மனிதர்களை
தகைமையுடன் தான்காத்துத் தாங்குகின்ற நற்றலைவன்
சுகமுடனே சுந்தரியின் சுமுகமதைத் தான்நோக்கி
யகமகிழ்வா லன்புகொண்டே யாதரிக்குந் தகையண்ணல்.

---

1. மேனாட்டின் மேயவர்=சொர்க்க அநுபவத்தில் கீர்த்தியுற்றவர்.
2. கஞ்சம்=தாமரை. 3. விஞ்சையர்=தேவர்கள்.

## ஏகாம்பரேச்வர பஞ்சகம்.

கலிப்பா.

1. முடிவாய்ந்த மன்னவரும் மற்றையரு முடிவிலொரு
பிடிசாம்ப லாவரெனு முண்மைகண்டும் பிதற்றுகின்ற
கொடிதான வென்றனுளக் குரங்கதனைச் சீர்தேற்றக்
கடிதாய்நீ வருவாயே கச்சியிறை ஏகம்பா.

2. ஏகம்ப னேயென்று எக்குறுயென் னறிவதுவும்
தாகம்ப லுகொண்டு தளர்ந்துவழி தப்பிடவே
[1]ஆகம்வ ளர்த்தலையே பகத்திலுன்னிச் சுழல்கின்ற
காகம்போ லாகாது காத்தருள்வை ஏகம்பா.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

3. காத்தருள்வை நீயென்று கசிந்துநான் மன்றுடிக்
கனிவ தாக
ஏத்தவருள் தான்கொடுக்கு மீசாநின் தாளதனை
இனிது காட்டி
மாற்றலரின் வசைகளைநான் மதியாத மனமடைய
வழியே தந்து
தேற்றிவிரி யுலகினிடை திரிந்துலவ நல்லருளைச்
செய்யே கம்பா.

4. அருள்வையென வனுதினமு மறையுமன மூவந்திலங்க
வன்பு கொண்டே
தருவையெலாஞ் சிறப்புடனே சகியோடு உரையுமனந்
தானின் புற்றே
[2]தெரிவையர்கள் நிறைந்துவளர் தேன்பொழியுங் காஞ்சி
நகர்ச் செல்வ னை
பரவைமனை பரிந்துசென்ற பரமசிவக் கொழுந்தான
பதியே கம்பா!

கலிப்பா.

5. கொழுந்தான நின்னடியைக் கோராத மாந்தரிடம்
அழுந்தாத செங்கமலப் பாதமல ரிணையடியேன்
[3]கழுந்தான மனத்திடையே உறப்பதித்துக் காத்தருள்வாய்
செழுந்தேனே, சின்மயமே, சீர்கச்சி ஏகம்பா.

---

1. ஆகம்=தேகம். 2. தெரிவையர்கள்=பெண்கள். 3. கழுந்தான =தேய்ந்து மழுங்கித்திரண்ட வடிவுடைய.

## பக்தவத்ஸலர் பஞ்சகம்.

நேரிசை வெண்பா.

1. சேரன்மா தேவியெனுஞ் சீரோங்கு மாநகருண்
வீரமொடு தானே விளங்குகின்ற—ஸாரதியே
பக்தவத்ஸ லாவென்று பாடுந் துதியுவப்பாய்
சக்தியுடைச் சீலனே சார்ந்து.

2. சார்ந்தே மனமகிழ்ந்து சாத்திரத்தின் சொற்படியே
யார்ந்தே யமைந்திருக்கு மாதிபனே—தேர்ந்தேயென்
வாக்கி னிடைத்தோன்றி வான்கருணை யேபொழிந்து
தேக்குநின் சீரே சிறந்து.

3. சிறந்துபல செல்வங்கள் சேர்த்திருசா ரோங்கிப்
பறந்துவரு நற்பொருளைப் பக்கம்—அறந்துலங்கு
சித்தர்முனி வோருமுனைச் சேவித்தன் றேயடைந்தார்
வித்தகமார் முத்திமுதல் வீடு.

4. வீடே பலவுடையோய் வேங்கடமா நற்பதியோய்
காடே திரிந்துலவு கார்வண்ணா—மாடே
யனைய வெனதுள்ள மாதிபனே யுன்தாள்
தனையன்றி மேவாது தான்.

5. தானடையாத் தம்மனத்தைத் தாங்குகின்ற மானிடர்கள்
வானடையு நல்வழியு வந்தளித்தாய்—ஞானமெனும்
அம்பொரு ளாதிய யாவையு நான்பெறவே
எம்பெரு மானே யிரங்கு.

## நெல்வேலிநாதர் பஞ்சகம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

1. நெல்விளை நிலங்கள் சூழ்ந்த நெல்வேலி நிலைய மான
அல்லல்கள் போக்கு மீசன் அன்பருக் குகந்த நண்பன்
வல்வினை பலவும் நீக்கி வரங்களைக் கொடுக்க வல்ல
சொல்லுணர் மாற்ற மில்லாச் சோதியைத்
தொழுது வாழ்வாம்.

2. சோதியாய்ச் சுடராய்ச் சொல்லு மாதியாய் யகில மாளும்
நீதனை நினைவி லுன்னி நெறிவழி தொடரு மன்பர்
காதினிற் [1]போத கத்தைக் கனிவுடன் தந்து ணர்த்தும்
ஆதியை யகம கிழ்ந்தே யன்புடன் சிந்தை செய்வாம்.

3. சிந்தையாற் றெரித லொண்ணுச் சிவனடி தொழுவே மாந்தர்
பந்தங்கள் பலவு நீங்கிப் பரகதி யடைந்து வாழ்வார்
கந்தவேள் குஞ்ச ரத்தைக் கனிவுடன் நமக்கு நல்குஞ்
சொந்தமாம் நெல்லை யப்பன் கழற்சுடர் சுமந்தே உய்வாம்.

4. கழல்களை மதியா நின்ற காலனை யுதைத்த வீரன்
சுழல்கொடும் பிறவி நோயைச் சுகமுறத் தொலைக்க வல்லோன்
அழல்விழி யரக்கர் தங்க ளரண்களை யெரித்த தீரன்
எழில்மிகு முகத்தைக் கண்டு [2]யேத்தியே புவியில் நிற்பாம்.

5. புவிதனில் நிகரில் லாத புண்ணியப் புருடன் தாளைக்
கவிபல தினமுஞ் சூட்டிக் கனமுடன் புகழ்ந்து பேசச்
செவியிணை யடைப டாமற் சுத்தமாஞ் சிந்தை யோடு
பவவினை யதுப றிக்கப் பணிவுடன் போற்றித் தாழ்வாம்.

## திருச்செந்திலாதிபன் பஞ்சகம்.

---

### கலிவிருத்தம்.

1. திரைகொழி கடலுடைத் திருச்செந்தில் வள்ளல்,
மறைகளு மறிவரு மாண்புடை மன்னன்,
பரகதி காட்டவே பாரினில் வந்தோன்,
அறமிகு கழல்களை யன்பொடு சேர்வாம்.

2. அன்புட னவனிணை யடிகளை வேண்டச்
சங்கட நழுவவே சற்குரு சேர்வார்;
என்புடைச் சங்கரன் *ஏற்றுதல் செய்த
துன்பினைத் தொலைத்தருள் சுரர்பெருந் தலைவன்.

---

1. போதகம்=ஞானம். 2. எத்துதல்=பணிதல்.
* ஏற்றுதல்=புகழ்ந்துபேசுதல்.

3. சூர்பகை யரக்கரைத் துண்டித்த வீரன்,
ஹரஹர வென்பவர்க் கயைந்திடு மன்பன்;
கரமிரு பஃ்துறு கசடனை வென்ரேன்
மருகனை வாழ்த்தியே மனக்களி கூர்வாம்.

4. மனக்களிப் பெழக்குற வள்ளியை மணந்தோன்
தினைப்புனங் காத்தனைத் திரணமாய் மதித்தோன்
சுனைதனி லழகுடன் சுற்றியே தவழ்ந்தோன்
கனம்பெற நமையெலாங் காத்தருள் செம்மல்.

5. காத்தருள் கரமுடைக் கர்த்தனைக் கண்டு
சாத்திர விதிப்படி சாற்றுவம் வாரீர்
தோத்திரஞ் செய்யவே தொல்வினை போக்கும்
நேத்திர நிரைநெறி யண்ணலைப் போற்றீர்.

## சங்கரநாராயண பஞ்சகம்.

---

கலிப்பா.

1. சங்கரன் கோயிலென்று சாற்றுமிந்தத் தனிநகருள்
திங்களே வாய்ந்ததிருச் சடையோனுந், திட்டமதாய்ப்
பொங்குபே ராழியிடைத் துயின்ரேனும், பொலிவாக
எங்குமில் லாக்காட்சி யெனக்களித்த திதுவென்னே?

2. இதுவென்னை யேயென்று யானேங்கா திசைபாடச்
சதுர்மறையி னென்ருய சாமமதைச் சாற்றுவித்தோய்,
மதுபருகு ராகுவினின் [1] வதனமதைக் கொய்துவென்ரேய்,
எதிர்வந்து மிருவருமே எனக்கருளை யள்ளிவைப்பீர்.

3. அள்ளிவைப் பீரென்று அன்புடனுன் பணிந்துநிற்க
வெள்ளிமலை தனில்வாழும் வெண்ணீறு மிகவணிந்தோய்,
கள்ளமன ராவணனின் கரமதனைக் கடிந்துநின்ரேய்,
பள்ளநில நீர்பாயும் [2] பரிசதுபோல் அருள்வார்ப்பீர்.

---

1. வதனம் = தலையைக்குறிப்பதால் சினையாகு பெயர். 2. பரிசு = விதம்.

4. அருள்வார்ப்பீ ரோவென்ற ஐயமதை யேயகற்றப்
பெருமாடு தனிலேறிப் புறப்படுமெம் பெருமானே,
திருமார்பி லேதங்குந் திருவாய்ந்த பெருமாளே,
தருமநெறி தந்தென்னைத் தாளுண்டு காத்தருள்வீர்.

5. காத்தருள்வீ ரோவென்று கலங்காது நான்வாழப்
பூத்தமலர்க் கொன்றைதனைப் புனைந்திலகு நெடுஞ்சடை
[யோய்,
ஏத்தமிகு துளபமதை எழில்மேனி தனிலணிந்தோய்,
ஆத்துமபோ தந்தெளிக்க வழகுடனே எதிர்வாரீர்.

## பழனிப் பஞ்சகம்.

கலிப்பா.

1. பண்டே யவன்மேனிப் பொலிவதனைப் பார்த்தும்
வண்டே யணையகுழன் வள்ளியினைக் கண்டும்
திண்டோள் வலிமைதனைத் தெளிவுடனே போற்றிக்
கொண்டோர் குலவுமலை திருப்பழனி யதுவே.

2. திருப்பழனி மேலிருந்து செகமதனை யாளும்
பொறுப்புடைய தீரனது புகழுதனைச் சொல்லும்
திருப்புகழை யேயோதிச் சிரந்தாழ்த்தி நின்ற
பெருப்புகழ் னருணகிரி பெற்றனன்நல் வீடே.

3. வீடாமிப் பழனியினை வீணென்றெண் ணாது
காடாமுன் மனத்திடையே கருத்தாகக் கொள்ளின்,
நாடாத நலமெல்லாம் நன்றாக நீடும்
பாடாத பாடல்களும் பரிவாக வருமே.

வேறு.

4. வருமே யவன்கருணை வம்பர்கள் தமக்குமென்று
திருவாய் மலர்ந்தசிவன் சேயைமன மாரக்கண்டு
தருவாய் மலர்ந்துமது தவழ்கின்ற மாலைகொண்டு
அருகா யுவந்துநின்று அகமகிழ்ந்து பூசைசெய்வாம்.

வேறு.

5. செய்வாமற் றவன்துதியே சேராத அறிவிலிக்கு
மைவாயும் விழித்தெய்வ யானைமன மிளகாது
சைவாக மக்கொழுந்தாம் ஷண்முகனைத் தோத்தரித்து
மெய்வாயு மானிடர்காள் மேனாட்டை யடைவீரே.

## குற்றாலப் பஞ்சகம்.

---

கலிப்பா.

1. பற்றாத நன்னெஞ்சப் போக்கினைப்பா விக்கும்
குற்றால மமர்ந்துவளர் குறைகள்தீ ரப்பன்
வற்றாத செல்வமதை வழங்குநல் லண்ணல்
குற்றால நாதனெனக் குதித்துநீ சேர்வாய்.

2. குதித்துப்பஃ றிசையோடுங் குரங்குகளை யெல்லாம்
விதித்திட்ட வேலைகளைச் செய்யச்செய் வித்தன்
மதத்தற்பப் பணிகளிலே மன்றாடி நொந்து
கொதித்துப்புண் படுநெஞ்சக் குரங்கினையாள் மகிபன்.

3. மகிபனென மனமுவந்து மாலைகொண்டு சாற்றி
விகிதமுடன் அருள்தனையே வேண்டவவ னளிப்பான்
சகியுடனே கலந்திருந்து சாரல்மழை மகிழ்வோன்
தகைமையுடன் தன்னடியைத் தாஸருக்குத் தருவோன்.

4. தாஸர்களி னாசைகளைத் தக்கணமே யருள்வோன்
பாசமதைப் பரிந்துவந்து பலமோடு பெயர்ப்போன்
நாசமிக வடையாது நற்றவரைக் காப்போன்
நேசமுறு பங்கினளை நீங்கருமன் புடையோன்.

5. உடையனென துளநடுவி லுரிமைபெற வாழ்வோன்
சடையனெதிர்ப் பகைவருயிர் சடுதியினில் மாய்ப்போன்
மடமையர்கள் புனல்முழுக மகிழ்வினொடு போகும்
தடவருவி யருகிலொரு தனியுலவு செல்வன்.

## சிதம்பர பஞ்சகம்.

கலிப்பா.

1. இதம்பெறவே வாழநம்மை யிங்கிதமா யாண்டுவரச் [வாம்
சிதம்பரத்தில் விளங்குகின்ற சின்மயத்தைச் சிந்தைசெய்
பதம்வேண்டிப் பக்தர்களும் பணிவுடனே மனங்கசிந்து
சதம்நினைந்து சாற்றுகின்ற தனியகிப னிவன்தானே.

2. இவன்தானே எனத்தேர்ந்தே யிசைபாடு மாந்தர்களின்
பவவினையை வேரறுத்துப் பாங்காகத் தானழைத்துச்
சிவயோக வானந்தஞ் சீராய வர்க்கருளித்
தவமகிமை மிகப்பெருகத் தானுளச் செய்குரவன்.

3. குரவனெனக் குவலயத்தோர் கும்பிட்டே வேண்டிநிற்கப்
பரமபத மவர்க்கருளிப் பாங்காக மனமகிழ்வோன்,
வரவெனவே தானினைத்த நந்தனது வயலிடையோர்
இரவுதனில் நீர்தேக்கி யினிதுண்மை யுணர்வித்தோன்.

4. உணர்வித்தோ னெனவோர்ந்த ஒழுக்கமுடை யன்பர்களைக்
கணப்பொழுது மறவாத காருண்ய நடராஜன்,
மணக்கோல வனப்புமலி மங்கைசிவ காமியுடன்
இணக்கமுறு வாழ்க்கையக விருளகற்ற வேவாழ்வோன்.

5. வாழ்வோ னெனப்பணிய வான்கருணை யேபொழிந்து
தாழ்வே வராதுயிரைத் தாங்குகின்ற தன்னியனின்
கீழ்நா மமைந்திருந்து கீர்த்தியுட னேயுய்யப்
பாழ்கூர் வினைகளையப் பசுபதியை போற்றிடுவோம்.

## அரங்கநாதன் பஞ்சகம்.

கலிப்பா.

1. ஸ்ரீஅரங்க நாதனையே சித்தமதி லேயுவந்தோர்
பாரரங்கந் தனிலாடப் பயப்படவே மாட்டார்காண்,
கோவரங்க மதினூடே கொடுகுதலுந் தாம்வேண்டார்
காரரங்க வண்ணனையே கருத்ததனிற் கொள்ளுவார்.

2. கொள்ளுகின்ற வெண்ணமதைக் குறையின்றி யேமுடிப்
பள்ளுழுநர் மிகநிறைந்த பண்ணைகளை யுடையபிரான்[போன்
தெள்ளுதமிழிற் பாமாலை தெரிந்துபலர் சூட்டிநிற்க
அள்ளியவர்க் கின்கருணை அகமுவந்தே யளித்தருள்வோன்.

3. அளித்தபெரு நற்கருணை யாறுகத் தானேடைக்
குளித்துமிகப் பலங்கொண்டு குவலயத்தி லேவாழ்வாம்,
பழித்தபெரு ராவணனின் பத்துத்த லைசிதர
இளைத்தவவ னிளையோனே எத்தல்செயு மெழில்வேந்தன்.

4. வேந்தனவன் கோயில்சுற்றி வேகமா யோடுகின்ற
சாந்தமுள்ள காவிரியுஞ் சாற்றுயெழிற் கொள்ளிடமும்
மாந்தளிரும் வாழைகளும் மார்க்கமெலா நிறைவுற்றுப்
பாந்துசற்று மில்லாது பகலவனை யேதணிக்கும்.

5. தணிப்பன்கலி தாங்கவொணுத் துர்ச்செயல்கள் யாவையுமே
அணிப்பொன்மலி மங்கையர்க ளறைந்தேற்று நற்றேவன்,
பணிப்பன்பல யாந்தர்களைப் பாமாலை தான்பாடக்
கணிப்பனவர் கீர்த்தியையே காத்தாள நித்தியமே.

## பூமிநாதர் பஞ்சகம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

1. விண்ணும்பூ வும்பிறவும் வேறுக வகுத்துரிமை
பூண்ட வேந்தே
பெண்ணும்மா ணுங்கருத்திற் பேதமற்றுத் துதிசெய்யப்
பிறங்கு மன்ணு
கண்ணுங்கா துங்கனிந்து கவனமுடன் கழற்றிறத்தைக்
கண்டு கேட்டு
எண்ணும்போ தன்பரெண்ண மிதயாகக் கொடுக்கவல்ல
பூமி நாதா.

2. கொடுக்கவல்ல சீலனென்றுங் குருவென்றுங் குவலயத்
தோர் கூடி வேண்டி
விடுக்கமன மொவ்வாது வீரவநல் லூர்வளரும்
வீரா வென்னத்
தடுக்கவென வேதெரித்த தாளதனை யவர்கட்குத்
தகைமை வாய்ந்து
நொடிக்கணத்தி லேநல்கு நோன்புடைய வாதிபனே
பூமி நாதா.

3. ஆதிபனே என்றேத்தி யடிபணியு மன்பர்களின்
அனுசோ கத்தைச்
சோதிமய மாய்நின்று தொலைத்தருளுந் திறமுடைய
சுயம்பு வான
பாதிமதி யமர்சடையோய் பக்தர்களை யேயுவந்தோய்
பாரி லின்றே
பூதிமணி யேயணிந்து புகழுடனே புறப்படுவாய்
பூமி நாதா.

4. புறப்படுவாய் நீயென்று புனிதமிகு மனிதரெலாம்
புகழ்ந்து போற்ற
அறக்கொடையை யேயுடைய சீரடிக ளன்னோருக்
களித்த வாறு
திருக்கருத்தி லேநினைந்து தென்னவன்ற னாணைகையே
சிதறிப் போகப்
பெருக்கருணை யேகொண்டு காத்தருளும் பெரியவனே
பூமி நாதா

5. பெரியவனே என்றுசொல்ல பேரின்ப மளித்தருளும்
புகழே வாய்ந்த
கரியுரியைப் போர்த்தவனே கடல்கடைய வெப்பமுடன்
கடுகி வந்த
எரிகடுவை முன்சென்றே யெடுத்துமிடற் றினிலடக்கி
எழிலே கொண்டு
நரிகளையும் பரியாக்கு நல்லோனே, நாவலனே, பூமி நாதா.

## விறல்வீரன் பஞ்சகம்.

---

சந்த விருத்தம்.

1. தண்ணந்தணுத்தமதி வண்ணம்பெருத்தமுலைப்
பெண்ணைச்சடைக்கிடையிலே
திண்ணந்தரித்தசிவ னெண்ணந்தவத்தினிலே
நண்ணித்திருக்கைலையில்
பண்ணும்மகப்பெருமை பண்ணும்மிகப்புகழக்
கண்ணன்றனக்கிளையளின்
எண்ணம்மிகப்பதற விண்ணின்னெழிற்படைகள்
நண்ணும்விறல்வீரனே

172871

வேறு.

2. விறல்வீரன்வந்தாலே சூரர்சேனைதான்வெல்லும்
பிறராலேமுடியாதென
ஹரர்பாலேதான்வந்து சரமதனையேயடுக்கும்
திறமிகுந்தமன்மதனையே
திரிபுரத்தையேயெரித்துப் பரிமளித்தவிழிதிறந்து
கரியவனைகச்செய்தும்
விரிசுனையிநடுவதனில் அறுகுழந்தையுருவுகொண்டு
திரிந்துலவுவிறல்வீரனே.

3. திரிந்துலவுவதுகண்டு பரிந்துவந்துதேவியுமே
அருந்தமுலையளித்தபோதே
பிரிந்திருந்தகுழவிகளும் பொருந்தியொருதேவாகி
அருந்தவர்கள்பிணியைநீக்கப்
பரந்தவெகுசேனைகளின் பிறந்ததளகர்த்தனாய்
யறந்தவெகுபாவிசூரன்
சிரந்தனையேகொய்துதிருக் கரந்தனிலேயேந்தியருள்
சுரந்தவொருவிறல் வீரனே.

வேறு.

4. ஏந்துவாயுன்கரத்திற் காந்திமிகுவடிவேலும்
சாந்துவாயெழில்மார்பிலே
சாந்தமிகுகுறவள்ளி பாந்தமுடனேசாய்ந்து
மாந்தர்மனமகிழ்விக்கவே
தாந்தாமதுகண்டு தாந்திமிதிதிமிதியென்று
வேந்தனின்வெகுசேனைகள்
ஆந்தனையுங்குதிபோடப் [1]போந்தின்றரோனுடைய
மேந்தலேவிறல்வீரனே.

5. ஏந்தலேயென்றுநான் சாந்தனையுமுனையேத்த
ஆந்தரங்கபக்திகொண்டே;
ஏந்தவெழில்வாய்ந்தபல வேந்திழயர்முன்னின்று
ஓந்திபோல்விழித்தலோடு
காந்தவிகன்கொடுத்ததே கேந்திரக்கனியென்று
பாந்துவயிறடைக்காமலே
பாந்தவமேபாராட்டிக் காந்தம்போற்பரிக்கப்
போந்தவனேவிறல்வீரனே.

---

1. போந்தின்றரோன்=பனம்பூமாலையணிந்தவன்; சேரன். 2. காந்தவிகன்=சமையற்காரன்.

முற்றிற்று.